உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—உசு.] பிரபவஹு மாசிமீ [பகுதி—ச.

Vol. XXVI. February-March-1928. No. 4.

## கவியின்பம்.

கவியின்பமாவது:—கவியிலுள்ள சொல்லும் பொருளுங் காரண மாகத் தோன்றும் இன்பம். கவி—செய்யுள். அவ்வின்பந் தரவல்லன செஞ்சொற்களாலாய கவிகளேயாம். அதுபற்றியே கம்பரும், "செஞ் சொற்கவியின்பம்" என்றார். செஞ்சொல்லாவது:—வழுவில் சொல், இன்பந்தரும்பொருளமைந்தசொல், கருதியபொருளைவிளக்குஞ் சொல், ஆழ்ந்தபொருளையுடைத்தாயசொல், செவிக் கின்பம்பயக்குஞ் சொல் ஆகிய இவைகளேயாம். வழுவில்சொல்—இலக்கணவரம்புடைய சொல்.

திருமுருகாற்றுப்படையென்னும் நூலினுள்,

"உலகமுவப்பவலனேர்பு திரிதரூஉம்
பலர்புகழ்ஞாயிறுகடற்கண்டா அங்கு"

என்னும் முதலடியிரண்டன்கண்ணும்வைத்து இச்செஞ்சொற்களி னியல்பை ஆராய்ந்துகாட்டுதும். உலகம், உவப்ப, வலன், ஏர்பு, திரி தரூஉம், பலர், புகழ், ஞாயிறு, கடல், கண்டா அங்கு என்னுஞ்சொற்கள் யாவும் வழுவின்மையின் இலக்கணவரம்புடையனவேயாம். உலகம் முதலிய அச்சொற்கள் ஒவ்வொன்றுமின்பந்தரும் பொருளமைந்தவாயி னும், தொடர்ப்பொருளைநோக்குமிடத்து உவப்ப, ஏர்பு, திரிதரூஉம்,

இவர்கட்கும் ஆக்ஷேபமில்லையாயினும், பெரியபுராணத்திற் கூறும் அநபாயனே முதலாங்குலோத்துங்கன் என்பதற்குற்ற ஆதாரங்களை வலிபெறுமாறு கூறவில்லையென்பதே எனதுகுறை. (1) அநபாயன் என்ற பேரை முதலாங்குலோத்துங்கன் எந்த ஆண்டிற்கொண்டான்? (2) பெரியபுராணத்திற் காணப்படும் அநபாயனும் இவனும் ஒன்று என்று கொள்வதற்குற்ற மறுக்கொணுச்சான்றுகள் யாவை? என்று நிலைநாட்டவேண்டுவது ஐயரவர்கள் கடமையாகும்.

இலக்கணவிளக்க ஆசிரியர் பரம்பரை,

திருவாரூர்ச் சோமசுந்தரதேசிகன்.

---

# திருச்செந்தூர்க் கழிக்கரைப்புலம்பல்.

திருச்செந்தூர் என்பது வரைபகவெறிந்த வென்றிவேற்கைக் குமரவேண் மகிழ்ந்தெழுந்தருளிய ஆறுபடைவீடுகளுள்ளே ஒன்று. திருச்செந்தூர், அலைவாய், முக்திக்ஷேத்திரம் முதலியன இத்தலத்திற்குரிய பேர்களாம். குமரவேள் செந்தமிழ்க் குருவாகவும் விளங்கினர். அகத்தியருக்குச் செந்தமிழ்மொழியைச் செவியறிவுறுத்தருளினர் என்ப. இன்னும், நக்கீரர், குமரகுருபரர், அருணகிரிநாதர், கச்சியப்பமுனிவர் முதலினேர் குகப்பெருமானுடைய திருவருள்பெற்ற பெரும்புலமையுடையோரேயாவர்.

திருச்செந்தூர்க் கழிக்கரைப்புலம்பல் என்பது தோட்டிக்கலைச் சுப்பிரமணியமுனிவர் அருளிச்செய்தது என்ப. இச் சுப்பிரமணியமுனிவர் சிவஞானமுனிவர் மாணவகர் பன்னிருவருள் ஒருவர் கலைசைச் சிலேடைவெண்பா, கலைசைக்கலம்பகம், சுப்பிரமணியர்விருத்தம், கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை முதலிய அருங்கவிநூல்களும் அப்பெரியார் கண்ட நூல்களேயாம்.

திருச்செந்தூர்க்கழிக்கரைப்புலம்பல் அச்சில்வரவில்லை. ஏட்டுப்பிரதிகளும் அகப்படவில்லை. ஏட்டுப்பிரதிகள் வைத்திருக்கும் அன்பர்கள் அவற்றை உதவுவார்களானுல், அச்சிட்டு அதனை வெளியிடலாம்.

பழந்தமிழ்ப்பிரபந்தமாதலின் தமிழகத்தாருக்குக் கழிபேருவகைபயக்கும் நூலாக இது நின்று நிலவ ஏதுவாகும். திருச்செந்தூர்ப் பெரிய கட்டியம் சுப்பையரவர்கள் மனனஞ்செய்திருந்து கூறிய ஒருசெய்யுளை இங்கே தருகின்றோம்.

பருவந்தழைத்தவள்ளியையும்
பருவந்தழைத்தவள்ளியையும்
படைக்கணணிமானிணைப்புணர்ந்தோன்
படைக்கணணிமானிணைப்புணர்ந்தோன்
திருவார்சந்தவரையுடையான்
திருவார்சந்தவரையுடையான்
செந்திலகத்தானலைவாயான்
செந்திலகத்தானலைவாயான்
மருவிவருமம்பாறுகளே
மருவிவருமம்பாறுகளே
மணக்கேதகையேயிலையாயா
மணக்கேதகையேயிலையாயா
கருவண்டமரும்போந்துகளே
கருவண்டமரும்போந்துகளே
கழியாதரிக்குமிப்பீரே.
கழியாதரிக்குமிப்பீரே.

உம்பர் உவந்து அழைத்த—தேவர்கள் விரும்பியழைத்த. வள் இயையும் படை—கூர்மை பொருந்திய வேல். சந்தவரை-கந்தமாதனமலை. செம்திலதம்—செம்மையான பொட்டு. அலைவு—துன்பம். பாறு—பருந்து. கேதகை—தாழை. கழி—கழிநிலம் (கடலோரத்து நிலம்). பீர்—பசப்பு. (துறை-மேனி பசப்புற்றமை தலைவர்க்குணர்த்தவேண்டல்).

திருத்தத்தையும், ஏட்டுப்பிரதியுடையார்தயவையும் பெறவேண்டியே இதனை வெளியிடமுன்னினும்.

வ. மு. இரத்தினேசுவரையர்.

---